உ
சிவமயம்.
ஸ்ரீ மரகதவிநாயகர் துணை.







## நாட்டுக்கோட்டை நகரத்தார்
## கோவில் திருமணம்

# வீடுதோறும் விளக்கு வேண்டும்

(இரண்டாவது வெளியீடு)




ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம்,
தலைவர், சமூக சேவா சங்கம்,

சு. பழனியப்பா,
காரியதரிசி, சமூக சேவா சங்கம்.
காரைக்குடி.





9–2–56
மன்மதஹு தைமீ 27உ.

சமூகத் தந்தையும் அரசியல் அறிஞருமான
காரைக்குடி ஸ்ரீ ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார்

30-5

உ



"காடு வெட்டிப்போட்டு கடியநிலம்திருத்தி

வீடுகட்டிக்கொண்டிருக்கும் வேல்வணிகர்வீடுகட்கு

அன்றைக்குவந்த எங்கள் அம்மா இலக்குமிநீ

என்றைக்கும் நீங்காதிரு''.

பாடுவார் முத்தப்பா,

கீழச்சிவற்பட்டி.

ஓம்
கணபதி துணை.

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

## திரு மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்

**7—11—52-ல்** பிள்ளையார்பட்டி நகர கோவிலில் நடைபெறும்

செல்வன்: **காசிவிஸ்வநாதன்** — செல்வி: **மங்கையர்க்கரசி**

*திருமணத்தைப் பாராட்டி அனுப்பிய*

# வாழ்த்துச் செய்தி.

வரவேற்புக் குழுவினர்க்கு,

அன்புமிக்க ஐயன்மீர்! நலம்.

திருமண அழைப்பு வந்தது. மகிழ்ச்சி. நம் நகரத்தார் மரபில் சென்ற பல ஆண்டுகளாகச் செல்வநிலை மிகுதியான ஏற்றத்தாழ் வின்றி நிரவலாக இருந்தது. அதனுல் எல்லோரும் ஒத்தநிலையான வாழ்க்கை நலம் பெற்று வந்தனர். தற்காலத்தில் ஒருசில இடங்களில் அளவில் மிகுந்தும் பல இடங்களில் மிகச்சுருங்கியும் காணப்படுகின் றது. அதனுல் பல குடும்பங்களில் உரிய காலங்களில் மக்களுக்கு மணமுடிக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். காரணம் வேண்டிய அளவிற்கு மீறிச்செலவு செய்து ஆரவாரமாகத் திருமணம் முதலிய வற்றை நடத்தவேண்டுமென்னும் அறியாமைக் கொள்கையேயாகும். இந்நிலையில் அறிவுடைய அன்பர்கள் சூழ்ந்து நமக்குரிய திருக் கோவில்களில் வைத்துச் சீர்திருத்த முறையில் விதியின் வழுவாது வேண்டிய அளவு சுருங்கிய செலவில் திருமணத்தை சிறப்புற நடத்து விக்க முன்வந்தது பெரிதும் பாராட்டத்தக்கது. இதனுல் நம் மரபுக்கும் பெருமையுண்டு. தெய்வ சந்நிதியில் நடைபெறுதலால் மணமக்களு டைய நல்வாழ்க்கைக்கும் இது ஏதுவாகும்.

மணமக்களாகிய செல்வன் **காசிவிஸ்வநாதனும்** செல்வி **மங்கையர்க்கரசியும்** மலரும் மணமும், பாலும் சுவையும் போல இயைந்து நல்வாழ்க்கையடைந்து நன்மகப்பேறு முதலிய நலன்க ளெல்லாம் பெற்று நீடுவாழ்க என வாழ்த்துகின்றேன். உமாநாதன் திருவருளால் திருமணம் சிறப்பாக நடைபெறுக.

மகிபாலன்பட்டி
4—11—52.

அன்பன்,
**மு. கதிரேசன்.**

உ
சிவமயம்
குமரவேள் துணை.

*ராம. கு. ராம. திட்டை. S. R.*

மணவினை நிர்வாகக்குழு காரியதரிசி

சு. பழநியப்பா,
ராமச்சந்திரபுரம்.

23—10—51 கர, ஐப்பசி, ௬, செவ்வாய்

நம் செட்டியார்களுள் செலவு செய்ய வசதியுள்ளவர்கள் தங்கள் தங்கள் விடுகளில் இயன்ற அளவு செய்து அடக்கமாகவோ (ஆடம்பரமாகவோ) மணவினைகள் நடத்தவும், சாதாரண நிலையிலுள்ளவர்கள் தேவாலயங்களில் சுவாமிமலை முதலான ஸ்தலங்களில் பலவகுப்பினர் மணவினையாற்றி வருதல்போல நடத்தவும் செய்யலாமென்பதே என் கருத்து. இம்முயற்சி சமய சந்தர்ப்பத்துக்கும் கால இயல்புக்கும் மிக மிக ஏற்றதாகும்.

உங்கள் அன்புள்ள,

*இராமசாமி.*

(மாசி) "சிவநேசன்" மாத இதழ் ஆசிரியரும், 96 ஊர் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் கோவிலூர் கூட்ட காரியதரிசியும், சிவநேசரும்.

## நாட்டுக்கோட்டை நகரத்தார்

# வீடுதோறும் விளக்கு வேண்டும்.

**மா** நிலத்து மதிவாணரும் கலைவாணரும் மகிழ்ந்து போற்றும் சீரிய நலன்படைத்தது சென்னை மாகாணம். இங்குள்ள சுமார் மூன்று கோடி ஐம்பத்தேழு லெட்சம் பேர்கொண்ட தமிழினத்தின் மிக முக்கிய உறுப்பாக தனவணிகர் சமூகம் அமைந்துள்ளது. இச்சமூகத்தின் ஆள்பலம் சுமார் அறுபதாயிரம். தமிழன் பெருமைக்கு அரண் செய்த இச்சமூகம் சரித்திர வரலாறு மிக்குடையதென்பதை அறிஞருலகம் கண்டு பெருமிதம் கொள்கின்றது.

சிலப்பதிகார காலத்துத் தனவணிகர் சீரும் சிறப்பும் குணநலனும் பண்பாடும் எத்தகைய நிலையில் பெற்றிருந்தனரோ, அதே நிலையில்தான், குடிபெயர்ந்து சேதுபதி நாட்டில் தேங்கிய காலத்தும், புகழொடு வாழ்ந்தனர். மலர்மகளின் கருணை—நீதி—நேர்மை—தரும சிந்தை—நாவன்மை—திறமை—விடாமுயற்சி—உழைக்கும் சக்தி —பொருள் நூல் ஆய்வு—ஒழுக்கம்—இன உணர்ச்சி ஆகியன இச்சமூகத்தினரிடம் அடைக்கலம் புகுந்திருந்ததே அதற்குக் காரணம். வாழ்க்கை முறை அமைப்பும் வகைசெய்த தொழிலும் மலர்மகளின் இருக்கைக்கு வழி வகுத்தன.

நூறு ஆண்டுகளின் முன்னர் பனையோலை மேய்ந்த வீடுகளில் குடியிருந்ததும், பொதிமாட்டின்மேல் பண்டங்கள் ஏற்றி ஊர் ஊராகச் சென்று மதுரையம்பதிவரை பண்டமாற்று வியாபாரம் நடத்தியதும், தொழுதூண் சுவையின் உழுதூண் இனிதெனத் தேர்ந்து கொண்டதும், ஏழை விவசாயிகட்கு குறைந்த நெல்வட்டிக்கு கொடுத்து வாங்கியதும், கூட்டுறவாக வீடுகட்டி ஒற்றுமையுடன் குடியிருந்ததும், வைக்கோல் பட்டரையில் திருமணங்கள் செய்துகொண்டதும், வீட்டுக்குத் தினசரி உபயோகத்துக்கான சாமான்களையே பெண் குழந்தைகளுக்குச் சீர்கொடுத்ததும், திருவாதிரை நன்னாளில் நம் பெண்கள் குதிரை ஏறியதும், தக்க முதியாரைக்கொண்டு மணமகளுக்குத் தாலிகட்டியதும், காப்புக்கட்டுப் புதுமை—காது குத்துப்புதுமை ஆகிய விசேட காலங்களில சீனி, தேங்காய், பழம், காப்பரிசி ஆகியனவற்றை வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்று ஊராருக்கு வழங்கியதும் ஊர் ஊராகச்சென்று சப்தி உபதேசத்தை ஆர்வமுடன் கேட்டதும், துக்கம் நேர்ந்த வீட்டில் மாரடித்துக் கொண்டதும், நாம் அறியாதவையல்ல. இந்தப் பழக்கவழக்கங்களெல்லாம் இன்று நம்மிடையே இல்லாது மறைந்துவிட்டனவே! காலச்சுழற்சி நம்மை

30



சீர்திருத்தமும் நல்லரசும் நாட்டில் சிறக்க வைத்த

**காரைக்குடி ஸ்ரீ ஆரு. ஆ. ராம.**
**சொக்கலிங்கம் செட்டியார் M. L. A.**

அப்படி மாற்றிவிட்டது. நாம் மாற்றத்தை விரும்பாவிட்டாலுங்கூட காலத்தின் வேகம் நம்மை மாற்றியே தீர்த்துவிடும். அதை எதிர்த்து நிற்க எவராலும் முடியாதென்பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்.

இத்தனை மாற்றங்கள் நேர்ந்துங்கூட, திரவியந்தேடும் கலையை விருத்திசெய்து கொண்டனர் நம்முன்னோர்கள். தமிழகத்தின் ஒருபகுதியில் நடத்திய வர்த்தகத்தை திரைகடலோடி சிங்களம்-மலாயா-பர்மா-ஜாவா-சுமத்ரா-இந்தோனேஷியா-மோரீஸ்-பாங்காக்-அந்தமான் போன்ற தூரத்து நாடுகள்வரை விஸ்தரித்துக்கொண்டனர். அருமை மனைவி மக்களை தாயகம்விட்டு வேற்றுநாடு சென்று, கைப்பொருள் அனைத்தையும் மூலதனமாக வைத்து வர்த்தகம்செய்து மலையெனப் பொருளைக்குவித்தனர். குவித்த செல்வமுழுமையும் நாணயமாக வைத்துக்கொள்ள இயலாததால், மண்ணாகவும், மனையாகவும் ஆங்காங்கு சேமித்து வைத்துக்கொண்டனர். கிடைத்த லாபத்தின் ஒரு சிறு பகுதியை மட்டும் தாயகம் வரும்போது கொண்டு வந்தனர். பணத்தின் பெருக்கம் எவ்வளவுதான் மிகுந்தாலும் கூட, வேற்றுநாடுகளில் வாழ்ந்த காலத்தில் நம்மவர் யாருமே ஒழுக்கத்தையே உயிரினும் இனிதெனக் கருதினர். ஒழுக்கம் சிறக்கச் சிறக்க விழுப்பம் கிடைத்தது நம்மவர்கட்கு. மலர்மகளும் ஆனந்தக்கூத்தாடினாள்.

தாயகம் கொண்டுவந்த சிறு சேமிப்புத்தான் இன்று செட்டிமார் நாட்டின் எல்வொரு சிறு கிராமங்களிலும் காணப்படும் மாடமாளிகை-கூட கோபுரம்-சத்திரம்-சாவடி-பசுமடம்-நந்தவனம்-வேதபாடசாலை-தேவார நிலையம்-கலைக்கோயில்கள்-மருத்துவ விடுதிகள் ஆகிய உருவங்களாக எஞ்சியிருக்கின்றன.

செட்டாகச் செலவிட்டு செல்வம் ஈட்டி செழுங்கிளை தாங்கும் பண்பு படைத்த செல்வச் சமூகம்தான் நம் செட்டியார் சமூகம் என்றால் மறுப்பார் இல்லை. அதற்கேற்பத்தான் பல காலம் வாழ்ந்தோம். இடையே சில்லரை மோகத்தின் வயப்பட்டு, துளிதுளியாகச் சேர்த்த செல்வத்தையும் சிறப்பையும் ஆடம்பரப் படாடோபத்தில் செலவுசெய்து விட்டோம். திரவியந்தேடத் தேர்ந்தெடுத்த தேசங்களெல்லாம் நம்மைக் கைவிடத் தொடங்கிவிட்டன. திரவிய வாய்க்கால் அடைபட்டு விட்டது. காலத்தேவன் திருவிளையாடல் தான் இது என்பதை இன்றைக்கேனும் உணர்ந்து கொள்ள கடமைப் பட்டிருக்கிறோம்.

கலியாணம் என்றால் லட்சமும், புதுமை என்றால் கால்-அரை லட்சமும் செலவிட்டால்தான் நம் விலாசத்துக்குப் பொருந்தும்; இல்லாவிடில் கண்ணியத்துக்குக் குறைவு என்ற எண்ணத்தால் ஆடம்பரச் செலவு செய்து பணத்தைக் கரைத்துவிட்டோம். ஏன்-இலக்குமியையே இழிவு படுத்திவிட்டோம். ஆண்கள்தான் இப்படிச் செய்து விட்டார்களே

இலக்குமியின் வாரிசான நம் பெண்களாவது உணர்ந்து பார்த்தார்களா? அதுவுமில்லை. போதுமான கல்வியும் உலக ஞானமும் சமூக அபிமானமும் பெண் சமூகத்துக்கு இல்லாதது தான் அதற்கு காரணமெனச் சிலர் சொல்லலாம். ஆனால், இன்றைய ஒருசில படித்த தனவணிகப் பெண்கள் கூட, தேவைக்கதிகமாக வரையறையின்றி வைர நகை தயாரிப்பதிலும் பொன் வெள்ளி எவர்சில்வர் பாத்திரங்கள் வகைவகையாய் அழகாகச் சேர்ப்பதிலும், அவற்றை திருமணக் காலத்தில் ஓரிரவுக் காட்சிக்கு வைப்பதிலும் சளைக்கவில்லையே! இப்படிச் செய்வதால் ஊரார் மெச்சுவரென அகந்தை கலந்த வீண் பெருமை கொள்கின்ற காட்சியை இன்றும் காண்கின்றோம். காலத்தின் நிலைமையைத் தெரிந்து கொள்ளாத இந்தப் பெண் தெய்வங்களுக்காக நாம் வருந்தாதிருக்கமுடியவில்லை. ஆகவே ஆற அமர சிந்தித்துப் பார்த்தால் தனவைசிய சமூகம் எத்திசை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பது தெளிவாகப் புலப்பட்டுவிடும். சிந்திப்பதற்கான சில கருத்துக்களை வாசகர்கட்கு நினைவுபடுத்தவேண்டியது சமூக அபிமானிகளின் கடமையாகும்.

மேல்நோக்கிச் செல்லவேண்டிய இச்சமூகம் கீழ்நோக்கிச் செல்வதை உணர்ந்து, சீர்திருத்த நோக்கங்கொண்ட சமூக அபிமான அன்பர்கள் சிலர், சுமார் 35 ஆண்டுகளின் முன்னர் "**தனவைசிய ஊழியர் சங்கம்**" என்ற பெயரால், செட்டிமார் நாட்டின் நடுநாயகமான **காரைக்குடியில்** ஓர் சங்கத்தை நிறுவினர். அச்சங்கத்தின் நோக்கம் பற்பலவாயினும், முக்கியமாக இதுதான்.

"பெரும் பணம் படைத்தவர்கள் தங்கள் புதல்விகளின் கலியாணச் செலவை இலட்சம் ரூபாய் அளவில் உயர்த்தி விட்டதால், சாதாரண தனவைசியர் யாரும் அந்த அளவு செலவு செய்தால்தான் தானும் தனவைசியராக இருக்கமுடியுமென ஒருவித தவறான எண்ணங்கொண்டிருந்ததாலும், அந்த அளவு செலவு செய்ய பணத்துக்கு வகையில்லாமல் அவர்கள் திண்டாடியதாலும், அருமைக் குழந்தைக்குக் கலியாணம் நடத்த இயலாமல் போயிற்று. ஏராளமான பெண்கள் கல்யாணத்தை முயற்கொம்பாகவே கருதவேண்டியதாயிற்று. பெண்களின் நிலைமை இப்படித்தேக்க முற்றதால், சமூகத்தைப் புறக்கணிக்க விரும்பாத பல இளைஞர்களும் விவாகத்தைப்பற்றி நினைக்கவே இடமில்லாது போயிற்று. இந்த நெருக்கடியைத் தவிர்க்க பெண் வீட்டார் தம் பெண்களுக்கு விலை கேட்கத்தொடங்கினர்கள். விலையும் விஷம் போல் ஏறத்தொடங்கிற்று. விலை ஏற ஏற சக்தியற்ற ஏராளமான இளைஞர்கள் திருமணத்துக்கு வகையின்றித் தவித்தனர். இத்தத் தவிப்பைத் தீர்க்கவேண்டுமென்பதுதான் அந்த ஊழியர் சங்கத்தின் தலையாய இலட்சியம்".

சங்கத்தின் இலட்சியம் ஈடேற பிரசாரம் தேவையாயிற்று. அதற்கென கோனுபட்டிலிருந்து "வித்தியாபானு" வார இதழ், தேவகோட்டையிலிருந்து "வைசியமித்திரன்" வார இதழ் ஆகிய பத்திரிகைகள் தோற்றுவிக்கப்பெற்றன. அவற்றைத் தொடர்ந்து "குமரன்" வார இதழும் "தனவைசிய ஊழியன்" வார இதழும் காரைக்குடியில் தோன்றின. பத்திரிகைப் பிரசாரம் ஒருபுறமிருக்க, உணர்ச்சி மிக்க சங்க இளைஞர்கள் ஊர் ஊராகச்சென்று தீவிர பிரசாரம் செய்யத்தலைப்பட்டனர். தொடர்ந்து ஆற்றிய முயற்சியின் பலன்தான், பல்லாண்டுகளாக கூடாதிருந்த 96 ஊர் கூட்டம் (மகாநாடு) கோவிலூரில் நடைபெற வாய்ப்பளித்தது.

அம்மகாநாடு வெற்றிகரமாக நடைபெற்றது. காரசாரமான வாதங்கள் மக்களின் உள்ளத்தைத் தொட்டுவிட்டதென பலரும் நம்பினர். ஆனல், அங்கு நிறைவேற்றப்பெற்ற தீர்மானங்கள் நடைமுறைக்குக் கொண்டுவரப்படவில்லை. செல்வந்தர்களது சர்வாதிகார ஆத்திரமும், இளைஞர்களது கண்காணிப்பு ஊக்கமும் உச்சநிலை எய்தியிருந்ததால், தனவைசிய ஊழியர் சங்கம் சமூக விரோதச் சங்கமென குற்றம் சாட்டப்பட்டு, அதனை ஒழித்துக் கட்டவும் தீய சக்திகள் ஏவி விடப்பட்டன.

இளைஞர்கள் தலைசாய்க்கவில்லை. ஜனக் கணிதம் எடுக்கத்துணிந்தனர். கால இயற்கையும் உதவிசெய்யத் தொடங்கிற்று. நாளுக்கு நாள் பொருளாதாரச் சீர்கேடு அதிகரிக்கவே, அந்த நெருக்கடியும் தானகவே மறைந்து விட்டது.

பெண்கள் கிடைக்காத நெருக்கடி மறையும் தறுவாயில், பற்பல சமூக இளைஞர்கள் கலப்பு மணம் செய்வதில் தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். அந்நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனித்த தனவைசிய இளைஞர்களின் மனதில் கலப்பு மணமோகம் குடிபுகுந்தது, கலப்பு மணம் செய்து கொண்ட ஒருசில தம்பதிகளின் வாழ்க்கையில் அடக்கமும் சிக்கனமும் உள்ளன்பும் ஒன்றையொன்று பின்னிக் கிடந்ததை காணுந்தோறும் எண்ணற்ற இளைஞர்கள் அவ்வழியே தீவிரமாக இறங்கத் தலைப்பட்டனர். அதன் காரணமாக சமூக இளங் கன்னியர்கள் பலர் புறக்கணிக்கப் பட்டதால், ஆண்களுக்கு கிராக்கி ஏற்பட்டது. பெண்களுக்கு விலை கொடுத்தது மாறி ஆண்களுக்கு விலை கொடுத்தால் தான் சமூகத்துக்குள் விவாகம் செய்ய முடியும் என்ற எதிரொலி கிளம்பிற்று.

இந்தப் புது நெருக்கடியைத் தவிர்க்க வழி என்ன என்பது பெரும் பிரச்னையாயிற்று. அதோடு இரண்டாவது மகாயுத்தம் காரணமாக அயல் நாடுகளிலிருந்து தாயகத்துக்குப் பணம் கொண்டு வர இயலாது போகவே வீட்டிலுள்ள வைர நகைகள்-தங்கம் வெள்ளிப் பாத்திரங்கள்-வாகனங்கள் ஆகியவைகளை விற்ருல்தான் வாழ முடியும் என்ற சூழ்நிலையும் சேர்ந்து,

கொண்டது. பின்னர் வீட்டுக் கூரையைக்கூட விற்கவேண்டிய கீழ்ப்படிக்கு சாய்ந்து விட்டனர் பலர்.

இந்தப் பரிதாப நிலையிலிருந்து மீளுவது எப்படி என்பதை உணர்ந்து, உணர்ந்தபடி நடக்க முன் வரவேண்டியது ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தலையாய கடமை என்பதை, இங்கு எடுத்துக் காட்ட விரும்புகின்றோம்.

வெளி நாடுகளை நம்பி வாழ்ந்த நம் சமூகத்தவர்களில் பலர் தாய் நாட்டிலேயே தொழில் நடத்த முன் வந்திருப்பதும், வட்டித் தொழில் ஒன்றை மட்டுமே கைக்கொண்டிருந்த பலர் பல பல துறைகளில் தொழில் நடத்த முனைந்திருப்பதும், கோயிலையும் அதனைச் சார்ந்த பல தர்மங்களையும் செய்வதே தர்மமெனக் கொண்டிருந்த கருத்தை மாற்றி கலைக் கோயில்களையும் தொழிற்சாலைகளையும் நடத்த முற்பட்டிருப்பதும், பல்லாயிரம் செலவில் நடத்திய விசேடங்களை ஓராயிரம் செலவுக்குக் குறைத்திருப்பதும், இன்று நாம் பெருமைப் படத்தக்க புரட்சித் தோற்றங்கள்தாம். போதுமான அளவு இன்னும் பல சமூகப் புரட்சிகள் நிகழவேண்டுமென்பதும், அவற்றின் மூலம் ஒப்பற்ற சிறப்பு இச்சமூகத்தவர்க்குக் கிடைக்க வேண்டுமென்பதும் எமது பேரவா.

நிற்க, இச்சமூகத்தின் ஆள் பலம் அதிகரித்து கட்டுப்பாடான பலம் பொருந்தியவர்களாகச் அமைக்க வேண்டியது. மேற்கூறிய நலன்களைப்பெற இன்றியமையாத் தேவையாகும். அதற்கு, திருமணமாகாத இளங் கன்னியர்களின் கண்ணீரையும் இளைஞர்களின் ஏமாற்றத்தையும் துடைக்க வேண்டியது நம் முன்னிற்கும் முதல் வேலை. இந்த வேலை மிக எளிதில் நடைபெறச் செய்ய வசதி படைத்த நம் பிரமுகர்கள் முன்வர வேண்டும். அவ்வாறு முன்வரும் அன்பர்கள், **இருள் சூழ்ந்த வீடுகளில் விளக்கேற்றிவைத்த புண்ணியத்தைச் செய்தவர்களாவர்.** சமூகத்தின் நலனையும் பெருமையையும் காப்பாற்றியவர்களாகவும் புகழ்பெறுவர். அதுமட்டுமல்ல, தாய் நாட்டுக்கும் நல்லதொரு தொண்டு செய்த பெருமையும் அவர்களைச்சாரும்.

காலத்துக்கேற்ப திருமண முறைகளை மாற்றிக்கொள்ள வேண்டியது சமூக அபிமானிகள்—சீர்திருத்த வாதிகள்—தனவந்தர்கள் ஆகியோரது பெருங் கடமையாக இருக்கின்றது. இவர்கள் அனைவரது ஒத்துழைப்பும் கிடைத்தால், வெற்றி வெகுதூரத்தில் இல்லை. பூப்பெய்தி பல ஆண்டுகள் வரை திருமணம் செய்து கொள்ள வழியில்லாது பெருமூச்செறிந்து அடுப்பங்கரையிலே குமுறிய நெஞ்சும் சிந்திய கண்ணீருமாகக் கிடக்கும் எண்ணற்ற கன்னியர்களின் நிலைமையை இன்னும் நீடிக்க விட்டால், இந்த சமூகத்தின் நிலைமை என்னாகும் என்பதைச் சிந்தித்துப் பார்ப்பவர்கட்கு



சமூக சேவா சங்கத்தின்
தோற்றுவாய் முதல்வர்
வள்ளல் ஸ்ரீ ராம. அழகப்பா
பார்-அட்-லா.



சமூக சேவா சங்க நிலைக்கள காரியதரிசி
ஸ்ரீ சு. பழனியப்பாவின் புதல்வன்
ஸ்ரீ நாச்சியப்பன் தம்பதிகள்.



ஆலயத் திருமணத்தை
ஆர்வமுடன் ஆதரித்த முதல்வர்
காரைக்குடி ஸ்ரீ அரு. அருணாசலம்
(நகரத் தந்தை)

அகக் கண்கள் திறக்கு மென்பதில் சந்தேகமில்லை; அகக்கண்கள் திறந்து விட்டால் செயலாற்ற முன் வருவரென்பதிலும் ஐயமில்லை.

அவ்வாறு முன் வந்து விட்டால், திருமணம் என்பது ஆடம்பரத்தால் அமைவதல்ல வென்பதும், ஆ ணு ம் பெ ண் ணு ம் இரண்டறக் கலந்து இல்வாழ்க்கைத் தோணியில் இன்பமாகப் பிரயாணம் செய்து, பெற்ற சமூகத்துக்கும் தேசத்துக்கும் கடனாற்ற வகைசெய்வதாகுமென்பதை மனதார கன்னெஞ்ச முடையாரும் ஒப்புக்கொள்வரென்பது நிச்சயம். அத்தகைய திருமணத்தை எவ்வளவு சிக்கனமாகச் செய்ய இயலுமோ அவ்வாறு செய்ய யாரும் பின்வாங்க மாட்டார்கள்.

நம் சமூகத்துக்கு வெளியே எம்மாதிரியான திருமணங்கள் எவ்வளவு சிக்கனமாக நிகழ்ந்து வருகின்றன வென்பதை இச் சந்தர்ப்பத்தில் நினைவு படுத்திக் கொள்ளுதல் நம்மனோர் கடமை.

வடலூர் வள்ளலாரின் திருவருட்பா கூறுகிறபடி கண்மூடி வழக்கங்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு ஒழுக்கத்தாலும் அறிவாலும் சிறந்த பெரியார் ஒருவர் முன்னிலையில் பதிவிளக்கு குலவிளக்கு ஏற்றிவைத்து சுமங்கிலிகளைக் கொண்டு எல்லாச் சடங்குகளையும், ஆண்டவனை வழிபட்டுச் செய்யுகின்ற தமிழ் மக்களும் இருக்கத்தான் செய்கின்றனர்.

காஞ்சியில் பங்குனித் திருவிழாவின் போது ஆண்டவன் முன்னிலையில் பல்லாயிரம் திருமணங்கள் நடத்துகின்ற பிறபல சமூக ம க்க ளு ம் இன்றும் இருக்கத்தான் செய்கின்றனர். அதேபோல், மதுரை—திருப்பரங்குன்றம்--சீரங்கம்—சுவாமிமலை—திருவானைக்காவல்-திருப்பதி-திருத்தணி போன்ற இன்னும் சில ஆலயங்களிலும் எண்ணற்ற தம்பதிகள் திருமணம் செய்து நல்வாழ்வு பெற்று வாழ்வதை இன்றும் கண்ணால் கண்டுதான் வருகின்றோம்.

சமூகவாரியாக எடுத்துக் கொண்டால் கூட, நாடார் சமூகம் நம் சமூகத்துக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாக விளங்கும். நாடார் சமூகத்தினர் அவர்களுக்கென தனியாக ஆலயம் அமைத்தும் அதனுள்ளேயே திருமண மண்டபம் அமைத்தும் இருப்பதைக் காண்கின்றோம். மணமகன் வீட்டாரும் மணமகள் விட்டாரும் திருமண நாளை முன்கூட்டியே அ ந் த ஆலய நிர்வாகிக்குத் தெரிவிப்பதும், நிர்வாகியே திருமணத்துக்கான எல்லா ஏற்பாடுகளும் உணவு வசதி உட்பட செய்து கொடுப்பதும், தம்பதிகள் உற்றார் உறவினருடன் அ ங் கு சென்று திருமணம் செய்து கொள்வதும் நாம் அறியாததல்ல, மேலும் அவர்களில் தம்பதிகள் ஏழையாக இருந்தால் அவர்கள் திருமணத்துக்காக, மகமை நிதிகள் பாங்கு நிதிகள் ஆகியவற்றிலிருந்து ஒதுக்கி உதவுவதும் நாம் பின்பற்றத்தக்க நல்ல அம்சங்களாகும்.

பெரியகுளம் தாலுகாவில் 1953-ல் 50-க்கும் மேற்பட்ட திருமணங்களை ஒரே இரவில், அச்சமூகப் பெரியதனக்காரர்கள் கிராமம் கிராமமாகச் சென்று நடத்திவைத்ததும் அத்தனை திருமணங்களுக்குமான பொது விருந்தொன்றை ஒரே இடத்தில் நடத்திவைத்ததும் பிற தமிழ்ச் சமூகத்தினர்க்கு ஓர் நல்ல பாடமாகும்.

காரைக்குடியில் கூட மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் தனது சொந்தச் செலவில் 5 திருமணங்களை ஒரே நாளில் ஒரே இடத்தில் நடத்தி வைத்து வழிகாட்டியுள்ளார்கள் மரு. சு. குடும்பத்தினர்.

இந்நிகழ்ச்சிகளை யெல்லாம் கவனித்தால், ஆலயங்களில் வைத்து திருமணம் செய்வதுகொள்வது சிறப்பும் சிக்கனமும் உடையதென்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். கோயில்களைப் பொறுத்தவரை வேற்றூர் கோயில்களுக்கு நாம் செல்ல வேண்டியதில்லை. நமது கோயில்களிலேயே எத்தனை திருமணங்கள் வேண்டுமானாலும் ஒரே நாளில் நடத்தி விடலாமென்பதையும் யாரும் மறுக்க இயலாது.

விருந்தைப் பொறுத்தவரையில், கோயிலிலேயே மிகச்சிக்கனமாக நடத்தி விடலாம். போதுமான வசதி எல்லாக் கோயில்களிலுமே இருக்கின்றன.

இதையெல்லாம் கொஞ்ச காலத்துக்கு முன்பே சிந்திக்காத குறைபாட்டினால், நமது இளைஞர்கள் கலப்பு மணம் செய்துகொள்ளவும், கிறிஸ்து மதத்தில் சேர்ந்து கொள்ளவும் இடங்கொடுத்து, நமது ஆள் பலத்தை நாமே குறைத்துக் கொண்டுவிட்டோம். இம்மாதிரியான செயல்களுக்கு இன்னும் இடங்கொடுத்தால், மிகவிரைவில் இச்சமூகம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுமென்பதில் சந்தேகமில்லை.

நிதி நிலைமையைப் பொறுத்தவரை எத்தனை திருமணங்களை வேண்டுமானாலும் தமது சொந்தச் செலவில் நடத்தி வைக்கத்தக்க சக்தி படைத்த தனவந்தர் யாருமே நம் சமூகத்தில் இல்லையென யாரும் சொல்ல முடியாது. மனம்தான் தேவை. மனமுடைய அப் பெரியார்களைத் தேடிப்பிடிப்பது நம் போன்ற சமூக ஊழியர்களின் கடமை. இந்தக் கடமையை பிறவிக்கடனைக் கொண்டு பணியாற்ற முன்வந்துள்ள காரைக்குடி தேச பக்தர் ஸ்ரீ ஆரு ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார். M. L. A. அவர்கட்கு இச்சமூகம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது. அவர்களோடு தேவகோட்டை ஜமீந்தார் ஸ்ரீ அழ. அரு. சோமநாதன் செட்டியார் அவர்களும், கானாடுகாத்தான் ஸ்ரீ க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்களும் உள்ளன்போடு முன்னின்று ஒத்துழைப்புத் தருகின்றனரென்பதை இச் சமூகத்தினர் அனைவரும் போற்றிப்புகழ்ந்து வாயார வாழ்த்துவரெனக் கூறவும் வேண்டுமா? தனவைசிய



சாந்தமும் தகைமையும் பிறவிப் பேறுகக்கொண்ட

கோட்டையூர்

ஸ்ரீ கவீ. அழ. ராம. ராமநாதன் செட்டியார்

ஊழியர் சங்க, பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார் சங்க ஆரம்ப காலத்திலிருந்து இன்றுவரை சமூகப்பணியே தெய்வப்பணி யெனக்கொண்டு செயலாற்றும் எனது உழைப்பும் உறுதுணையாக நிற்கின்றதைத் தெரிவிப்பதில் பெரும் மகிழ்ச்சியடைகிறேன்.

இப் பெரியார்களின் நன் முயற்சியால் 24—8—50 முதல் இன்று வரை சுமார் 30 திருமணங்கள், ரூபாய் 1250-க்கு மேற்படாத செலவில் நகரக்கோவில்களில் நடைபெற்றுள்ளன. இவற்றுள் 9 திருமணங்கள் நன்கொடை மூலம் நடைபெற்றுள்ளனவென்பதை சமூகத்தார்க்குத் தெரிவித்தல் எனது கடமை. நன்கொடை தந்துதவிய அன்பர்களுக்கும் நன்கொடை திரட்டிய மேலே கூறிய பெரியார் மூவர்க்கும் சிறப்பாக ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களுக்கும், திருமணம் செய்து கொண்டு இல்லறத்தை நல்லறமாக நடத்தி நல் வாழ்வு பெற்றுள்ள தம்பதிகள் அனைவரின் சார்பாக எனது உள்ளம் தோய்ந்த நன்றி அறிதலும் வணக்கமும் உரியன. அவர்கள் நீடுழி வாழவும் அவர்களது உற்சாகமும் ஊக்கமும் தளராது சிறக்கவும், அவர்களைப் பின்பற்றி எண்ணற்ற தனவந்தர்கள் கருணையுள்ளம்பெற்று சமூகம் வளம் பெறவும் எல்லாம் வல்ல இறைவனை எனது மனமொழி மெய்களால் வழுத்துகின்றேன்.

உங்கள் அன்புள்ள
ஊழியன்

***சு. பழனியப்பா***
**காரியதரிசி**
**சமூக சேவா சங்கம்.**

---

விபரம் வேண்டுவோர்:- சு. பழனியப்பா, கடியாபட்டி, ராமச்சந்திரபுரம் P.O. திருச்சி ஜில்லா என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

# நகரக் கோவில்களிலும் அதைப்பின்பற்றியும் நடைபெற்ற மணங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 24-8-50 | விகுரு-ஆவ.8 | மாத்தூர் | நேமுத்துப்பட்டி | அசி. நா. கோவிந்தன்-தையநாயகி |
| 2 | 9-2-51 | ஷ -தை- 27 | மாத்தூர் | கொ. லெக்ஷிமிபுரம் | சுப. சுப. இராமசாமி-உலகாம்பாள்-பாரட்லா க. வீ. அழ. மு. அழகப்பா கோட்டையூர் 500 |
| 3 | 9-2-51 | ஷ -தை- 27 | கானுடுகாத்தான் | நாட்டரசன் கோட்டை | கரு. சிவ. சோ. சிவராமன்-வள்ளிம்மை |
| 4 | 22-4-51 | கர - சித் - 9 | மாத்தூர் | ராமச்சந்திரபுரம் | வ. சு. சுப. சுப்பிரமணியன்-உமையாள் |
| 5 | 11-5-51 | கர -சித்- 28 | மாத்தூர் | கொ. லெக்ஷிமிபுரம் | கரு. பழ. நாகப்பன்-அளகம்மை, க. வெ. சித. வெ. வெங்கிடாசலம் செட்டியார் 500 |
| 6 | 25-5-51 | கர -வை- 11 | மாத்தூர் | கல்லல் | நா. வெ. அ. சொ. மாணிக்கவாசகன்-உமையாள் பள்ளத்தூர், அ. மு. மு. 500 |
| 7 | 12-9-51 | கர -ஆவ- 27 | அரிமளம் சிவாலயம் | அரிமளம் | ப. செ. பள. சொ. காசிவிஸ்வனுதன்-மீனுக்ஷி |
| 8 | 13-9-51 | கர -ஆவ- 27 | பிள்ளையார்பட்டி | கண்டவிராயன் பட்டி | கரு. அண. அளகப்பன்-சிகப்பி, கானுடுகாத்தான் மு. சித. மு. 500 |
| 9 | 1-11-51 | கர-ஐப்பி- 15 | சூரக்குடி | கீழச்சிவற்பட்டி | அ. அரு. அள. பழனியப்பன்-சின்னம்மாள் உதவி சே.சி.நா., மு.சித.மு., பழ.கரு.ராம.பழ. மூவரும் 1250 |
| 10 | 1-11-51 | கர -ஐப்பி.15 | குன்னக்குடி | பள்ளத்தூர் | கும. சுப. சண்முகம்-ஆதம்மை |
| 11 | 16-11-51 | கர-ஐப்பி- 30 | அரிமளம் சிவாலயம் | கானுடுகாத்தான் | கா. அ. சு. பெ. சித. சுப்பய்யா-முத்தம்மாள் |
| 12 | 9-12-51 | கர -கார்- 23 | மாத்தூர் | தேவகோட்டை | ஆரு. உ. உ. ஆறுமுகம்-சீதை |
| 13 | 9-12-51 | கர -கார்- 23 | மாத்தூர் | கோ. அளகாபுரி | உ உ.ச. சபாபதி-சொர்னம் |
| 14 | 6-2-52 | கர -தை- 24 | கொத்தமங்கலம் | பாகனேரி | சுப. ஆவி. இராமசாமி-வள்ளியம்மை |
| 15 | 9-5-52 | நந்த- சித்- 27 | பிள்ளையார்பட்டி | மேலச்சிவபுரி | கரு. மாணிக்கம்-வள்ளியம்மை, கானுடுகாத்தான் மேயர் RM. ராமனுதன் செட்டியார் 500 |
| 16 | 31-10-52 | ஷ-ஐப்பி- 15 | வயிரவன்பட்டி | தேவகோட்டை | வ. க. மு. மு. குழந்தை-ஆனந்தம், கருப்பாயி |
| 17 | 7-11-52 | ஷ-ஐப்பி- 22 | பிள்ளையார்பட்டி | கீழச்செவற்பட்டி | அ. பழ. சித. காசிவிஸ்வனுதன்-மங்கையர்க்கரசி |
| 18 | 11-2-53 | விஜய.தை.29 | வயிரவன்பட்டி | காரைக்குடி | கமு. ராம. கா. லெட்சுமனன்-சுந்தரம், உதவி: க.வீ.அழ.ராம. 150, பெ.மு.சுப. 100, அரியக்குடி ராதாகிருஷ்ண 50, வயி.தே. நகரத்தரர் 50, ஆக 350 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 19 | 4-9-53 | விஜய-ஆடி 20 | நேமம் | ஆராவயல் | சுப்பய்யா-சேதுக்கரசி |
| 20 | 28-10-53 | ஷை-பிரட்- 12 | பிள்ளையார்பட்டி | கண்டமாணிக்கம் | ராம. குமரப்பன்-அளகம்மை. கண்டமாணிக்கம் செ. சி. நா. கல்லல், சிங்கப்பூர் கடையாரும் |
| 21 | 21-4-54 | ஜய -சித்- 9 | பிள்ளையார்பட்டி | உலகன்பட்டி | ஆ. சித. லெட்சுமணன்-நாகம்மை |
| 22 | 23-5-54 | ஷை -வை- 10 | மாத்தூர் | கொத்தமங்கலம் | செ. லெ. கணேசன்-முத்தாயி |
| 23 | 10-6-54 | ஷை -வை- 28 | கோனுபட்டு | கோனுபட்டு | ராம. நா. இராமசாமி-நாகம்மை |
| 24 | 7-7-54 | ஷை-ஆனி- 23 | பிள்ளையார்கோவில் கோவிலூர் | காடத்தாம்பட்டி | பள. நாச்சியப்பன்-மீனாக்ஷி. **கரு. முத்து. தியாகராஜா 500** **உ. அ. பெரி. மு. 500** |
| 25 | 9-9-54 | ஷை-ஆவ- 24 | நச்சாந்துபட்டி | வேந்தன்பட்டி | அ. மு. வெ. சபாபதி-வினைதீத்தாள், **தேவகோட்டை அள. சுப. பள. 250** |
| 26 | 11-4-55 | ஜய-பங்- 29 | மாத்தூர் | தேவகோட்டை | பிச. பி. சுப்பிரமணியன்-கண்ணத்தாள். |
| 27 | 26-5-55 | மன்- வை-12 | சிவாலயம் | நேமுத்துப்பட்டி | அ. சி. நா. குப்பான்-சிகப்பி, |
| 28 | 30-10-55 | ஷை -ஐப்- 13 | பெரியகோவில் மாத்தூர் | புதுவயல் | பள. சி. அரு. சுப்பிரமணியன்-செல்லம்மை. |
| 29 | 2-2-56 | ஷை - தை- 20 | கோவிலூர் | காரைக்குடி | வெகு. நா. மெய்யப்பன்-முருகாமிர்தம், **உதவி சா. ராம. அரு. ராம. 250** |

எங்கட்கு தகவலின்றியும் சில கோவிலில் நடந்திருப்பதாக தெரிகிறது.

# நன்கொடையாளர்.

———[∴]———

1) கோட்டையூர் க. வீ. அழ. மு. பாரட்லா திரு. அழகப்பா ரூ. 500

2) கானுடுகாத்தான் திரு. க. வெ. சித. வெங்கிடாசலம் செட்டியார் ரூ. 500

3) ஷை திரு. மு. சித. சிதம்பரம் செட்டியார் ரூ. 1000

4) கண்டமாணிக்கம் திரு. செ. சி. நா. லெ. அழகுசுந்தரம் செட்டியார் ரூ. 500

5) கண்டவிருயன்பட்டி திரு. பழ. கரு. வீ. பழனியப்ப செட்டியார் ரூ. 250
1250 பார்டி சொந்தத்தில் வாங்கிச் சொன்னது.

6) பள்ளத்தூர் திரு. அ. மு. மு. முருகப்ப செட்டியார் ரூ. 500

7) கானுடுகாத்தான் திரு மேயர். ராம. ராமநாதஞ் செட்டியார் ரூ. 500

8) கோட்டையூர் திரு. க. வீ. அழ ராம. இராமநாதஞ் செட்டியார் ரூ 150
ஆத்தங்குடி திரு. சுப. சு. சுப்பய்யா செட்டியார் ரூ. 100
அரியக்குடி திரு. வயி ராம கி. ராதாகிஷ்ணஞ் செட்டியார் ரூ. 50
வயிரவன் கோவில், தெ. நகரத்தார் ரூ. 50
} ஒரு மணத்துக்கு

9) பள்ளத்தூர் திரு. உ. அ. பெரி. அருணசலம் செட்டியார் ரூ. 500

10) ஆ. தெக்கூர் திரு. கரு. முத்து. தியாகராஜன் செட்டியார் ரூ. 500

11) தேவகோட்டை திரு அள. சுப. சு. திருநாவுக்கரசு செட்டியார் ரூ. 250

12) கானுடுகாத்தான் திரு. சா. ராம. அரு ராமநாதஞ் செட்டியார் ரூ. 250
மேலும் ஷை யார் உதவிய ரூ. 250. கண்டமாணிக்கம் திரு. செ. சி. நா. லெ. நாராயணன் செட்டியார் B. A. அவர்கள் நன்கொடையாக தந்த ரூ. 100 பிரசுரம், பாராட்டுகளுக்காக செலவிடப்பெற்றது.





